யுடையவனே யென்கிறார். அந்த திருக்குணம் எதுவாக இருக்குமென்று ஆராய்ந்தால் ப்ரகரணத்தை யநுஸரித்து வாத்ஸல்யமே அது - என்று எம்பெருமானார் திருவுள்ளம் பற்றுகிறார். தோஷபூயிஷ்டனான சேதநன் பெரியபிராட்டியாரைப் புருஷகாரமாக வரிப்பது எதற்காக வென்னில், தன்னுடைய தோஷங்களைக் கண்டு எம்பெருமான் தன்னை நிக்ரஹித்தருளாமைக்காகவன்றோ; அப்பிராட்டியினுடைய புருஷகாரபலத்தாலே எம்பெருமானிடத்தில் முதன் முதலாக எந்த திருக்குணம் விகாஸமடைகின்றதென்னில்; வாத்ஸல்யகுணமே யென்பது நிர்விவாதம்.

55 வாத்ஸல்யமாவது தோஷாதர்சித்வமா? தோஷபோக்யத்வமா? என்கிற விசாரம் இவ்விடத்தில் சிறிதும் கொள்ளப்படவில்லை. எதுவாயினுமாகுக. தோஷாதர்சநமே வாத்ஸல்யமென்று கொள்வோம். அக்குணம் எம்பெருமானுக்கு உள்ளதேயானாலும் சேதநனுடைய அபராதபாஹுள்யத்தாலே அது உள்ளே அமுங்கிக்கிடந்ததென்றும், பிராட்டியின் புருஷகார பலத்தாலே அது தலையெடுக்கிறதென்றும் ஆசார்யர்கள் கண்டறிந்து கூறுகிறார்கள். இவ்விஷயத்தை தேசிகனும் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் த்வயாதிகாரத்திலும் மற்றும் சிறு ரஹஸ்யங்களிலும் ஸுஸ்பஷ்டமாக வெளியிட்டுள்ளார். *நிகரில்புகழாய்!* என்கிற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியில் விவக்ஷிதமான குணம் வாத்ஸல்யமே யென்பது பிள்ளைலோகாசார்யருடைய ரஹஸ்யங்களோடு தேசிக ரஹஸ்யங்களோடு வாசியற எல்லாவற்றிலும் விளக்கமாகத் தெரிவிக்கப்பட்டுள்ளது. ஆக, இந்த வாத்ஸல்ய குணத்தை ஆழ்வார் நிகரற்றதாகத் திருவுள்ளம்பற்றின படியாலே, ஸ்வாமி ராமாநுஜர் இதை மற்ற திருக்குணங்களோடு சேர்த்துப் படித்த வளவால் த்ருப்திபெறாமல் தனிப்படவும் ஒரு சூர்ணிகை இதற்காக இட்டருளினார். இதனால் ஆழ்வாரருளிச் செயலில் எம்பெருமானார் வைத்திருந்த கௌரவாதிசயம் விசதமாகும். ... ... *

### பகவத்ராமாநுஜஸ்ரீஸூக்திசைலி (யத்பதாம் போருஹத்தனியன்)

56 ஆளவந்தார்க்குத் தனியனாக *யத்பதாம்போருஹேத்யாதி ச்லோகம் ஸ்வாமியருளிச் செய்தது ஸுப்ரஸித்தம். இது கீதாபாஷ்யத்திலேயே சேர்ந்ததாதலால் ஸ்வாமி ஸூக்தி யென்பதில் விவாத லேசமுமில்லை. இந்த ச்லோகம் அமைந்திருக்குமழகை ஆராய்ந்தால் ஸ்வாமியின் உக்திஸரணி லோகவிலக்ஷணமானதென்பதை அல்ப ப்ரஜ்ஞர்களும் அறுதியிடக்கூடும். அந்த ச்லோகத்திற் நுப் பெரியார்கள் பரம்பரையாக உபதேசித்துவரும் அர்த்த விசேஷங்களை ஆஸ்திகர்களுக்கு உபகரிக்கிறேன்

57. ''யத்பதாம்போருஹத்யாந வித்வஸ்தா சேஷகல்மஷ:,
வஸ்துதாமுபயாதோஹம் யாமுநேயம் நமாமி தம்.'' (இது ஆளவந்தார் தனியன்)

இது ஆளவந்தாருடைய இரண்டு திருவடிகளை மாத்திரம் சிந்திப்பதாகச் சொல்ல வந்ததன்று; *யத்பதாம்போருஹ பதத்தினால் பதினான்கு திருவடிகள் உத்தேசிக்கப்படுகின்றன. (யத்பதாம்போருஹ) என்கிற ஆறு எழுத்துக்களுக்கு வர்ணக்ரமம் சொன்னால் பதினான்கெழுத்துக்கள் தேறும். யகார அகார, தகார, பகார, அகார, தகார ஆகார, மகார, பகார ஓகார, ரேப, உகார, ஹகார அகார = என்றுயிற்று வர்ணக்ரமம் சொல்லும் வழி. இவ்வகையில் தேறுகிற பதினான்கெழுத்துக்களும் பதினான்கு திருவடிகளைத் தெரிவிக்கும். அவை எவையென்னில்: ஆளவந்தாருடைய இரண்டு திருவடிகள் தெரிந்தே யிருக்கின்றன. அவ்வாளவந்தார் தமக்குப்

பரமநிதியாகக்கொண்ட [*ஸ்ரீமத் ததங்க்ரி யுகலம் ப்ரணமாமி மூர்த்நா* என்ற] நம்மாழ்வாருடைய இரண்டு திருவடிகள்; ஆக நான்கு. அவ்வாளவந்தாருடைய திருவடிகளை ஆச்ரயித்திருந்து ஸ்வாமிக்கு ஆசார்யர்களான பஞ்சாசார்யர்களின் திருவடிகள் பத்து. ஆக இப் பதினுன்கு திருவடிகளைச் சிந்தித்து ஸத்தை பெற்றதாகத் தெரிவிப்பது இந்த ச்லோகம். இதனை விவரித்துக் காட்டுகேன் காண்மின்.

53 யஸ்ய பதாம்போருஹே—யத்பதாம்போருஹே; என்று ஸமாஸம். (ஸம்பந்த ஸாமாந்யே ஷஷ்டீ, என்று அறிக.) ஆளவந்தாருடைய திருமேனியிலுள்ள பாதார விந்தங்களைச் சொன்னபடி. மறுபடியும் 'யஸ்ய பதாம்போருஹே, என்ருல்—ஆளவந்தார்தாம் *மாதா பிதா யுவதய:* என்கிற ச்லோகத்தில் "ஆத்யஸ்ய ந: குலபதேர் வகுளாபிராமம் ஸ்ரீமத் ததங்க்ரியுகளம் ப்ரணமாமி மூர்த்நா*என்று தம்முடைய சென்னிக்கு அணியாகப் பரிக்ரஹித்த நம்மாழ்வாருடைய உபயபாதங்களும் யத்பதாம்போருஹ சப்தத்தினுலேயே எளிதாகத் தெரிவிக்கப்படும். இப்போது ஷஷ்டிக்கு அர்த்தம்—பரிக்ராஹ்ய பரிக்ராஹக பாவரூபமான ஸம்பந்தம். மீண்டும் 'யஸ்ய பதாம்போருஹாணி யத்பதாம்போருஹாணி' என்று கொள்க. உலகில் சிஷ்யர்களைத் திருவடிகளென்றே ஸம்ப்ரதாயஜ்ஞர்கள் வழங்குவராதலால் ஆளவந்தாருடைய ஐந்து சீடர்களையே ஆளவந்தாருடைய திருவடிகளாகச் சொன்னபடி.

54. 'பதாம்போருஹ' என்பதில் இரண்டு பதங்கள் உள்ளனவன்ருே? (பத என்றும், அம்போருஹ என்றும்.) திருவடிக்கு வாசகமான பத சப்தத்தினுல் அவருடைய சிஷ்யர்களைச் சொல்லி, தாமரைக்கு வாசகமான அம்போருஹ சப்தத்தினுல் அவர்களுடைய திருவடிகளைச் சொல்லுகிற தென்றும் கொள்ளலாம். அம்போருஹமென்ருல் திருவடிகளைச் சொல்லுமோ வென்னில்; *தாவி வையங் கொண்ட தடந்தாமரைகட்கே *மண்விண்முழுது மளந்த வொண்டாமரை* என்கிற ஆழ்வார் பிரயோகங்களை யறிந்தவர்கள் இதில் விப்ரதிபத்தி பண்ணமாட்டார்கள். "தாவி வையங்கொண்ட தடந்தாளிணை" என்ன வேண்டுமிடத்தில் திருவடிக்குப் பர்யாயமாகத் தாமரையையே சொல்லியிருப்பது காண்க. இந்த நடை வடமொழியிலுமுண்டு அபஹ்நுதி யலங்கார மென்பர்கள். ரூபகாதிசயோக்தியுமாகும். "பச்ய நீலோத்பலத்வந்த்வாத் நிஸ்ஸரந்தி சிதாச் சரா:" இத்யாதி பரச்சதம் காண்க.

55. ஆக, பரமாசார்யரான நம்மாழ்வாரையும் ப்ராசார்யரான ஆளவந்தாரையும் ஸ்வாசார்யர்களான ஐவரையும் ப்ரகாசப்படுத்தியே தனியனிட்டிருக்கு மழகு ஸஹ்ருதய ஹ்ருதயங்கமம். "குரும் ப்ரகாசயேத் சிஷ்ய:" என்னுமல் "குரும் ப்ரகாசயேத் தீமாந்" என்று மூலப்ரமாணத்தில் இருக்கையாலே மஹா மேதாவிகள் எவ்விதமாக ஆசார்ய ப்ரகாசநம் பண்ணலாமோ அவ்விதமாகவே ஸ்வாமி தாமும் தம்முடைய மேதாவைபவம் விளங்க இங்ஙனே ச்லோகரத்நம் தொடுத்திருப்பது மிகவற்புதம். மஹான்களுடைய திருநாவின் வீறு இங்ஙனே யன்றே இருப்பது

56. இப்படி நுட்பமாகத் தெரிந்துகொள்ள வேண்டும்படி ஏதுக்கு ச்லோகமியற்ற வேணும்? எல்லாரும் ஸுஸ்பஷ்டமாகவே நன்கு தெரிந்து கொள்ளும்படி யியற்றலாகாதோ வென்று கேட்பவர்கள் யாவஜ்ஜீவம் அப்படியே கேட்டுக்கொண்டிருக்கலாம். அவர்களுக்கு விடையிறுக்க நம்மாலாகாது.

57. *யத்பதாம்போருஹேத்யாதியான மேற்குறித்த தனியனில் மற்றொரு விசேஷமும் நுட்பமாக உய்த்துணரத் தக்கதுண்டு; அதாவது—[பதாம்போருஹ] என்று ஐந்து எழுத்துக்களையிட்டு ஆளவந்தார் திருவடிகளை நிர்தேசித்திருப்பதானது ஆளவந்தாருடைய ஐந்து திருவடிகள் [அதாவது, ஐந்து சிஷ்யர்கள்] தம்முடைய சிந்தனைக்கு இலக்கானவர்களென்றும் தெரிவிக்கப்பட்டதாகிறது. அதுதன்னிலும் முதலிலே பகாரத்தையிட்டிருப்பதானது அந்த ஐந்து ஆசாரியர்களுள் தலைமையாசிரியரே தமக்குத் தலைவரான ஆசார்யராக வாய்த்தார் என்பதற்கு ஸூசகமாகிறது. எங்ஙனே யென்னில்; ஸ்வாமிக்குத் தலைமை யாசிரியர் பெரிய நம்பி; அவருடைய நிஜநாமதேயம் பராங்குசதாஸர் என்பது வாக்ய குருபரம்பரையில் "ஸ்ரீமதே ராமாநுஜாயநம:, ஸ்ரீமத்யாமுநமுநயே நம:" என்ற வாக்கியங்களுக்கிடையில் "ஸ்ரீபராங்குச தாஸாய நம:" என்றிருப்பது கொண்டும் பெரிய நம்பியினுடைய திருநாமம் பராங்குச தாஸ ரென்பதே யென்றறியலாம். பதாம்போருஹ என்றதில் முதலிலுள்ள பகாரம் பராங்குச தாஸராகிற தம் முதலாசிரியரை ப்ரத்யபிஜ்ஞாபநம் பண்ண வல்லது என்றுணர்க.

58. இதற்குமேல் ஒன்று கேட்கக்கூடும்; முதலெழுத்தினால் பெரிய நம்பி ஸூசிதராகிறப்போலே, மற்றை நான்கெழுத்துக்களினாலும் மற்றநான்கு ஆசாரியர்கள் ஸூசிதர்களாகிறபடியையும் காட்ட வேண்டாவோ? என்று. கேண்மின்; தலைவரான ஆசிரியரைக் காட்டுமளவே போதுமானது. ஒவ்வோராசிரியரையும் இங்ஙனே காட்டியாகவேணுமென்கிற நிர்ப்பந்தமில்லை. மஹா விவேகிகளான சதுரர்கள் இன்னமும் உட்புகுந்து ஆராய்ந்து பார்த்தால் அந்த வழியும் புலப்படக் கூடும். மற்றொருகால் அதுவும் வெளிவரும். ஆக இந்த உபபாதந ப்ரக்ரியையினால் எம்பெருமானார் அரிய பெரிய விசேஷங்களை நுட்பமாகவே அருளிச்செய்யுமியல்வினர் என்பதை விவேகிகள் நிர்ணயிக்கக் குறையில்லை.

59. திருமாலையாண்டான் திருவடிகளிலே ஸ்வாமி திருவாய்மொழிப் பொருள் கேளா நிற்கையில் "த்ரோணாசார்யர்க்கு ஏகலவ்யன் போலே ஆளவந்தார்க்கு நான்" என்றருளிச் செய்ததாக சரித்திர நூல்களிலே ப்ரஸித்தமாக வுள்ளது. இதை வேதாந்த வாசிரியர் அப்படியே ஸம்ஸ்க்ருதப்படுத்தி அருளிச் செய்கிறார்—"த்ரோணாசார்யஸ்ய ஏகலவ்ய இவ யாமுநாசார்யஸ்ய அஹமித்யபிப்ராயேண" என்று யத்பதாம்போருஹ ச்லோக வியாக்கியானத்திலுள்ளது.

60. ஆழ்வார் திருவடிகளில் ப்ராவண்யமே வடிவெடுத்தவரான ஆளவந்தாருடைய திருவடிகளைச் சிந்தித்துத் தாம் ஸத்தை பெற்றதாகச் சொல்லிக் கொள்ளுமெம்பெருமானார் ஆழ்வார் திருவடிகளிலும் அவருடைய திவ்ய ஸூக்திகளிலும் ஆளவந்தாரைவிட அதிசயிதமான ப்ராவண்யமுடையவரே யென்பது சிலாலிகிதம்.

### ஸ்ரீரங்ககத்ய ஸ்ரீஸூக்தி விசேஷம்.

61. எம்பெருமானார் அருளிச்செய்த ஸ்ரீரங்ககத்யத்தின் ஆரம்பம் [*ஸ்வாதீந த்ரிவித சேதநாசேதநஸ்வரூபஸ்திதிப்ரவ்ருத்திபேதம்*] என்பது. சேதநர்களினுடையவும் அசேதநங்களினுடையவும் ஸ்வரூபமென்ன, ரக்ஷணமென்ன, ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளென்ன இவை தன்னதீனமாயிருக்கப்பெற்றவன் எம்பெருமான்—என்பது மேலெடுத்த ஸ்ரீஸூக்தியின் கருத்து. இதைப்பற்றி விமர்சித்ததில், திருவாய்

மொழியின் முதற் பதிகத்தில் 4, 5, 6, ஆம் பாட்டுக்களில் முறையே நம்மாழ்வாரருளிச்செய்த அர்த்தத்தையே திரட்டி *ஸ்வாதீநேந்யாதி ஸ்ரீஸூக்தியை ஸ்வாமியருளிச் செய்தாரென்று அறுதியிடப்படுகின்றது.

62 அதை நன்கு விவரிக்கிறேன்; *நாமவனிவனுவன்* என்கிற நாலாம் பாட்டில் நாம் முதலான தன்மைப் பொருள்களும், அவன் இவன் உவன் என்கிற ஆண்பால் சுட்டுப் பொருள்களும் அவள், இவள், உவள் என்னும் பெண்பால் சுட்டுப்பொருள்களும், எவள் என்கிற பெண்பால் வினுப்பொருளும், அவர் இவர் உவர் என்னும் பலர்பால் சுட்டுப் பெயர்களும், அது இது உது என்னும் ஒன்றன் பால் சுட்டுப்பொருள்களும், எது என்னும் ஒன்றன்பால் வினுப்பொருளும், நசிக்குந் தன்மையுள்ள பொருள்களும், இவை உவை அவை என்னும் பலவின்பால் சுட்டுப் பொருள்களும், நல்லவஸ்துக்களும் கெட்ட வஸ்துக்களும் எதிர்காலப் பொருள்களும் இறந்தகால பொருள்களும், ஆகின்ற எல்லாப் பொருள்களும் அந்த ஸர்வேச்வரனேயாம் (அதாவது) ஸர்வேச்வரனிட்ட வழக்கேயாம் என்றது. உலகத்திலுள்ள சேதநா தேசதநப் பொருள்களெல்லாம் இந்தச் சிறிய பாட்டில் உக்தி வைசித்திரியாலே அடக்கப்பட்டு, இவை யெல்லாவற்றினுடையவும், ஸ்வரூபம் பகவானுடைய அதீனம் எல்று தெரிவிக்கப்பட்டபடியால் இதுதன்னையே "ஸ்வாதீ நத்ரிவித சேதநா சேதந ஸ்வரூப என்றூர் ஸ்வாமி யெம்பெருமானுர்.

63 இதற்கடுத்த பாட்டு *அவரவர் தமதமது* என்பது. இதன் கருத்தாவது உலகில் பலவகைப்பட்ட அதிகாரிகள் இருக்கின்றூர்களே; அவரவர்கள் தம்தமது உணர்ச்சிக்கு எட்டியபடியே ஓரோ தெய்வங்களை ஸ்வாமிகளாக வெண்ணி ஆச்ரயிப்பர்கள்; இப்படி அவரவர்களால் தொழப்படுகின்ற அந்தந்த தெய்வங்கள் அவரவர்கள் விரும்பின பலன்களைக் கொடுப்பதில் குறையற்றே யிருக்கின்றன எதனுலே யென்னில்; ஸர்வஸ்வாமியான ஸ்ரீமந் நாராயணன் அவரவர் தம்தமது அத்ருஷ்டாநுஸாரமாய்ப் பலன் பெறும்படியாக அந்தந்த தெய்வங்களுக்கு அந்தர்யாமியா யெழுந்தருளியுள்ளான்; அதனுலேதான்—என்பதாம். இதனுல் சொல்லிற்றுவ தென்னென்னில்; உலகத்தில் நடக்கிற ரக்ஷணத்தொழில் யாவும் எம்பெருமானுடையதே; பிரமன் சிவனிந்திரன் முதலிய இதர தெய்வங்களைக் குறித்தும் மற்றும் அதிக்ஷுத்ர தெய்வங்களைக் குறித்தும் அவரவர்கள் வழிபாடுகள் செய்து தாம்தாம் கோரின பலன்களைப் பெறுவதாகக் கண்டாலும் அதுவும் எம்பெருமான் தானே அத்தெய்வங்ளுக்கு உள்ளீடாக விருந்து நடத்துகிற ரக்ஷணமே யன்றி அத்தெய்வங்களே சுதந்திரமாகச் செய்து விடுகிற ரக்ஷணமன்று என்றதாயிற்று. [*நஹி பாலந ஸாமர்த்த்யம் ருதே ஸர்வேச்வரம் ஹரிம்*] என்றும், [*ந ஸம்பதாம் ஸமாஹாரே விபதாம் விநிவர்த்தநே, ஸமர்த்தோத்ருச்யதே கச்சித் தம் விநா புருஷோத்தமம்*] என்றுமுள்ள பிரமாணங்களை யடியொற்றி யருளிச் செய்ததாமிது. ஆக இந்தப் பாசுரத்தின் ப்ரமேயத்தையும் சேர்த்துக்கொண்டு ஸ்வாதீநத்ரிவித சேதநாசேதநஸ்வரூப ஸ்திதி" என்றூர் ஸ்வாமி. [ஸ்திதியாவது ரக்ஷணம்.] சேதநாசேதந ரக்ஷணத்தையும் தன்னதீனமாக வுடையவனென்கை.

64 இனி, இதற்கடுத்த ஆறுவது பாட்டு* நின்றனரிருந்தனர்* என்பது. இப்பாட்டின் கருத்தாவது, நிற்பவர்கள் இருப்பவர்கள் கிடப்பவர்கள் திரிபவர்கள் ஆக

இப்படிப்பட்ட ப்ரவ்ருத்தி சீலர்களும், நில்லாதவர்கள் இராதவர்கள் கிடவாதவர்கள் திரியாதவர்கள் ஆக இப்படிப்பட்ட நிவ்ருத்தி சீலர்களும் எம்பெருமானிட்ட வழக்கே என்பதாம். இதில், ப்ரவ்ருத்தி சீலர்களையும், நிவ்ருத்தி சீலர்களையும் சொல்லியிருந்தாலும் அவர்கள் இங்கு விவக்ஷிதர்களல்லர்; கீழ் *நாமவனிவனுவன்* என்கிற பாட்டிலே தர்மிகளான ஸகலத்தையும் சேரப் பிடித்தெடுத்து அவர்கள் யாவரும் எம்பெருமானிட்ட வழக்கே யென்பது சொல்லி முடித்த விஷயமாதலால் இப்பாட்டு அத்தோடு புநருக்தமாகக் கூடாது; அதில் சொல்லப்படாத விஷயமே இங்குச் சொல்லப்பட்டதாக வேண்டும்; ஆகவே, ப்ரவ்ருத்தி நிவ்ருத்திமான்கள் எம்பெருமானிட்ட வழக்கு என்று சொல்லுகிற விப்பாசுரமானது, அவரவர்களின் ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளாகிற தருமங்கள் எம்பெருமானிட்ட வழக்கே என்று சொல்லிற்றாயிற்று.

65 இப்போது, நின்றனரிருந்தனரித்யாதிக்குப் பொருள்—நிற்றல் இருத்தல் கிடத்தல் திரிதலாகிற ப்ரவ்ருத்திகளும், நில்லாமை இராமை கிடவாமை திரியாமையாகிற நிவ்ருத்திகளும் எம்பெருமானதீனமே யென்கை யல்லது வேறல்ல. இது ஸகலபூர்வாசார்ய வ்யாக்கியான ஸித்தம். ஆக இந்தப் பாசுரத்தின் ப்ரமேயத்தையும் சேர்த்துக்கொண்டு "ஸ்வாதீந த்ரிவிதசேதநாசேதந ஸ்வரூப ஸ்திதி ப்ரவ்ருத்தி பேதம்" என்றருளிச் செய்தார் ஸ்வாமி. எனவே, திருவாய்மொழிப் பாசுரங்கள் மூன்றின் ஸாரார்த்த ஸங்க்ரஹமாக *ஸ்வாதீநேத்யாதி சூர்ணையை எம்பெருமானார் அருளிச்செய்தா ரென்றதாயிற்று. .... ... ...

### கிரீட மகுட சூடாவதம்ஸ விசேஷம்.

66 ஸ்வாமி யருளிச் செய்த சரணாகதி கத்யத்தில் *அகிலஹேய ப்ரத்யநீக* இத்யாதியான பெரிய சூர்ணையில், திவ்ய ரூபவர்ணனம், திவ்யகுண வர்ணனம், திவ்யபூஷண வர்ணனம், திவ்யாயுத வர்ணனம், திவ்ய மஹிஷீ வர்ணனம் முதலான பல வர்ணனங்கள் ஆச்சர்யமாகச் செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் திவ்ய பூஷண வர்ணன பரமான *ஸ்வோசித விவித விசித்ராநந்தேத்யாதி வாக்கியத்தில் "கிரீட மகுட சூடாவதம்ஸ' என்றுள்ள ஸ்ரீ ஸூக்தியின் ஆழ்பொருளைப் பற்றிச் சிறிது விமர்சிப்போ மிங்கு.

67 குறிக்கொள்க. கிரீடமென்றும் மகுட மென்றும் சூடாவதம்ஸமென்றும் தனித்தனியாக மூன்று சொற்கள் இருந்தாலும் இவை மூன்றும் திருமுடியிலணியும் ஆபரணத்தையே சொல்லும். அந்த ஆபரணம் ஒரே விதமாக இருப்பதில்லை. திருவபிஷேக மென்றும், கொண்டை யென்றும், தொப்பார மென்றும் மூன்று விதமாக வழங்கி வருவதுண்டாதலால் அம்மூவகைத் திருவாபரணங்களுக்கும் வாசகமாக கிரீடமென்றும் மகுடமென்றும் சூடாவதம்ஸ மென்றும் மூன்று பதங்கள் இங்கு ப்ரயோகிக்கப்பட்டன வென்னலாம். முக்கியமாயும் உபதேச பரம்பராப்ராரப்தமாயுமுள்ள ரஸ்யரஹஸ்யார்த்த மொன்று இங்கு அறியவேண்டிய துண்டு: நம்மாழ்வாருடைய திவ்யஸூக்தியொன்றைத் திருவுள்ளம்பற்றியே "கிரீட மகுட சூடாவதம்ஸ" என்று மூன்று சிரோபூஷணங்களைப் பேசியுள்ளார் எம்பெருமானார்.

68 அந்த திவ்ய ஸூக்தி யெதுவென்னில், திருவிருத்தத்தில் *பாரளந்த பேரரசே! எம்விசும்பரசே! எம்மை நீத்து வஞ்சித்தோரரசே! * என்றுள்ள பாசுரம். இதில், அரசே! அரசே! அரசே! என்று மூன்று விசை விளித்தருளுகிறுர். பாரளந்த பேரரசே! என்பதனுல், உலகளக்கிற வியாஜத்தினுல் எல்லார் தலையிலும் திருவடியை வைக்கையாகிற ஸௌலப்யகுணம் அநுபவிக்கப்பட்டது. விசும்பரசே? என்பதனுல் நித்யஸூரிநாதத்வமாகிற பரத்வம் அநுபவிக்கப்பட்டது. எம்மை நீத்து வஞ்சித்தோரரசே! என்பதனுல் தம்மோடு ஸம்ச்லேஷ விச்லேஷங்கள் பண்ணிப் போருகையாகிற ப்ரணயித்வகுணம் அநுபவிக்கப்பட்டது. ஆக, ஸௌலப்யத்துக்காகக் கவித்த முடியும், பரத்வத்துக்காகக் கவித்த முடியும் ப்ரணயித்வத்துக்காகக் கவித்த முடியுமாக மூன்று முடிகள் நம்மாழ்வாரால் எம்பெருமானுக்குச் சூட்டப்பட்டனவாயின. இவ்விஷயம் ஆசார்யஹ்ருதயத்தில் ''பாரளந்த வென்னும் மூன்று முடிக்குரிய இளவரசுக்கு'' என்பதனுல் காட்டப்பட்டுள்ளது. இங்ஙனே எம்பெருமானுக்கு மூன்று ஸாம்ராஜ்யாபிஷேகம் ஆழ்வார் திருவுள்ளத்திலுல் நேர்ந்திருப்பதைத் திருவுள்ளம் பற்றியே ஸ்வாமி யெம்பெருமானுர் கிரீட, மகுட சூடாவதம்ஸமென்கிற மூன்று சொற்களாலே மூன்று முடிகளை யருளிச்செய்தாரென்று திண்ணமாகக் கொள்ளக்கடவது.

69 இனி, இதில் ஒரு சிறிய கேள்வியுண்டாகும்; ப்ரணயித்வகுணமென்பது ஸௌலப்ய குணத்திலே அந்தர்ப்பவியாதோ? அதைத் தனிப்படச் சொல்லி அதற்காக வொரு திருவபிஷேகம் சூட்டினதாகச் சொல்ல வேணுமா? என்று; இதற்குக் கேண்மின்; அந்தரங்க பக்தர்களிடத்தில் அஸாதாரணமாகக் காட்டும் ப்ரணயித்வ குணத்தை ஸர்வ ஸாதாரணமான ஸௌலப்யகுணத்திலே அந்தர்ப்பவித்ததாகக் கொள்ளுவது பொருந்தாது. ஸ்ரீ பாஷ்ய மங்கள ச்லோகமான *அகிலபுவநஜன்மேத்யாதியில் முதல் பாதத்தில் ஸ்தேமசப்தத்திலுல் ரக்ஷணம் சொல்லப்பட்டிருக்கச் செய்தேயும் மீண்டும் இரண்டாவது பாதத்தில் *விநத விவிதபூத வ்ராத ரக்ஷை சொல்லப்பட்டிருக்கின்றது. இது தனிப்படச் சொல்லவேணுமோ ? முதல் பாதத்தில் சொன்ன ஸ்தேம சப்தார்த்தமான ரக்ஷணத்திலேயே இதுவும் அந்தர்ப்பவியாதோ ? என்று கேட்டால் ' அது ஸாமாந்ய ரக்ஷணம் சொன்னபடி, இது விசேஷ ரக்ஷணம் சொல்லுகிறபடி ' என்று ஸமாதானம் சொல்ல ப்ராப்தமாகிறது. புபுக்ஷுக்களின் ரக்ஷணம் வேருய், முமுக்ஷுக்களின் ரக்ஷணம் வேருயிறே யிருப்பது. அது போலவே *உண்டியே உடையே உகந்தோடுமிம்மண்டலத்தாரிடத்தில் காட்டும் ஸௌலப்யமும் *உண்ணுஞ்சோறு பருகு நீர்த் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ண னெம்பெருமானென்றேயிருக்கு மாழ்வார் போல்வார் பக்கலிலே காட்டும் ஸௌலப்யமும் நெடுவாசி பெற்றதாகையாலே ஒன்ருய் விடாது. அதற்கு ஸௌலப்யமென்று பெயர்; இதற்கு ப்ரணயித்வமென்று பெயர். ஆகவே மூன்று திருக்குணங்களுக்கான ஸாம்ராஜ்யாபிஷேகத்துக்காக எம்பெருமானுரிட்டருளின கிரீடமகுட சூடாவதம்ஸங்களாகிற மூன்று முடிகள் மிகப்பொருந்தும்.

## ஸ்ரீபாஷ்யமங்களச்லோக விவரணம்.

70. ''அகிலபுவந ஜந்மஸ்தேமபங்காதிலீலே விநத விவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே, ச்ருதிசிரஸி விதீப்தே ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே பவது மம பரஸ்மிந் சேமுஷீ

பக்திருபா. இது ஸ்ரீ பாஷ்யத்தின் மங்கள ச்லோகம். இது எம்பெருமானுடைய துதியாக அமைந்திருப்பது போலவே நம்மாழ்வாருடைய துதியாகவும் அமைந்திருக்கின்றது. இதை நாம் ஏறிட்டுச் சொல்லாமல் இயற்கையாகவே அமைந்ததென்று ரஸிகர்கள் உணருமாறு நிரூபிக்கிறோம் [அகிலபுவநஜன்மஸ்தே பங்காதிலீலே] அகிலாநாம் 'புவநாநாம்' ஜன்மஸ்தேம பங்காதிகளை லீலையாகவுடையவன் பரமபுருஷன் என்பது ஒரு பொருள். புவநஸ்தேம பங்காதிலீல: (பரமபுருஷ:) அகிலம் யஸ்ய! ஸ:- என்று நம்மாழ்வார்பரமான பொருளில் விக்ரஹமாகக் கடவது "வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப:" என்று கீதையில் கூறினபடி வாஸுதேவனையே தாரகபோஷக போக்யங்கள் எல்லாமுமாகக் கொண்டவர் நம்மாழ்வார் என்கை. * உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனெம் பெருமான்" என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தில் தமக்கு அகிலமும் எம்பெருமானே யென்பதை ஆழ்வார்தாமே கண்டோக்தியாகக் கூறியுள்ளார்.

71. மற்றொருபடியாகவும் கேண்மின். அகில என்பதை புவனத்திற்கே விசேஷணமாக்கி, அகிலபுவநஜன்மஸ்தேம பங்கங்களுக்கு ஆதியானவன்—காரண பூதனானவன் எம்பெருமான்; தேந ஸஹ லீலா யஸ்ய ஸ:—அகிலபுவநஜன்மஸ்தேம பங்காதியான எம்பெருமானோடு லீலையை—விளையாட்டைச் செய்தவர் நம்மாழ்வார்; திருவாய்மொழி ஆரம்பத்தில் இரண்டாம்பதிகமான மின்னிடை மடவார்கள்என்று தொடங்கும் பதிகத்தில் "என்னுடைய பந்துங்கழலும் தந்துபோகு நம்பீ" என்பது முதலான பாசுரங்களினால் எம்பெருமானுக்கும் ஆழ்வார்க்கும் லீலை நடந்தமை உணரத்தக்கது.

72. [விநதவிவித பூதவ்ராத ரக்ஷைகதீக்ஷே] *காக்குமியல்வினன் கண்ணபெருமான் என்றபடி விநதர்களான ஸகலப்ராணிகளையும் ரக்ஷிப்பவன் எம்பெருமான். அவன் எப்படி ரக்ஷிக்கிறானென்றால் * வண்புகழ்நாரணன் திண்கழல்சேரே* என்று ஆழ்வார் உபதேசித்தபடி தன் திருவடிகளை வணங்கினாரை ரக்ஷிக்கின்றான். அந்தத் திருவடி நிலை ஸ்ரீ சடகோபனென்று பேர் பெற்றுள்ளது. "ஜகதாம் அபிரக்ஷணே த்ரயாணாம் அதிகாரம் மணிபாதுகே! வஹந்த்யோ யுவயோ:" என்று பாதுகாஸஹஸ்ரத்தில் கூறினபடி விநதவிவிதபூதவ்ராதரக்ஷணம் பாதுகையினுடையதேயாதலாலும் அந்த பாதுகை ஸ்ரீசடகோபனென்று பேர்பெற்று ஆழ்வாரிற்காட்டில் வேறுபட்டதல்லாமையாலும் இந்த விசேஷணம் ஆழ்வார்க்குப் பொருந்தத் தட்டில்லை.

73. விநதவிவிதபூதேத்யாதியான இந்த விசேஷணம் தனிப்படவேணுமோ? முதல் பாதத்திலுள்ள ஸ்தேமசப்தார்த்தமான ரக்ஷணத்திலே இது சேரக்கூடியது தானே. முமுக்ஷுக்களை ரக்ஷிப்பது மோக்ஷப்ரதானத்தாலேயாதலால்- என்று சிலர் கேட்கக்கூடும். இங்கு ஸம்ப்ரதாய நுட்பமொன்று உணர வேணும். ஆழ்வார் திருவாய்மொழியில் பத்துடையடியவர்க்கெளியவனென்ற பாசுரத்திற்கடுத்தபாசுரத்தில் "வீடாந் தெளிதரு நிலைமையதொழிவிலன்" என்று பரமபுருஷனுக்கு மோக்ஷப்ரதத்வத்தைத் தனிப்பட ஒரு லக்ஷணமாக அருளிச் செய்திருக்கையாலே அதை அடியொற்றியே எம்பெருமானார் இங்குத் தனிப்பட இரண்டாவதுபாதத்தினால் விசிஷ்டரக்ஷணத்தையருளிச் செய்தபடி ஆளவந்தாரும் ஸ்தோத்ரரத்னத்தில் "த்வதங்க்ரிஸரோஜம்" என்று தொடங்கும் சுலோகத்தில் "ஜகதுத்பவஸ்திதிப்ரணாச" என்று ஸ்ருஷ்டிஸ்திதி ஸம் ஹாரங்களைக் கூறின பின்பு "ஸம்ஸாரவிமோசன என்று மோக்ஷப்ரதானத்தைத் தனிப்பட அருளிச் செய்தாராயிற்று.

74. விநதேத்யாதியான இந்த விசேஷணத்தில் (விவித) என்றும் (வ்ராத) என்றுமுள்ளஇரண்டு பதங்களுக்கு ஸ்வாரஸ்யம் தேறுமாறு ச்ருதப்ரகாசிகை யிலும் தத்வடீகையிலும் பணித்த விசேஷார்த்தம் கீழே விவரிக்கப்பட்டிருப்பதை இங்கு ஸ்மரிப்பது.

75. [ச்ருதிசிரஸி விதீப்தே] ச்ருதிசிரஸி எம்பெருமான் விதீப்தனுயிருப்பது போல ஆழ்வாரும் விதீப்தராயிருக்கின்றார்; எங்ஙனேயென்னில்; *தத் விப்ராஸோ விபந் யவோ ஜாக்ருவாம்ஸஸ ஸமிந்ததே* என்கிற ச்ருதிசிரோவாக்யம் ஆழ்வாரை விவக்ஷித்தே அவதரித்தது. விப்ராஸ: என்றது விப்ரா: என்றபடி. [தேவா: என்பது தேவாஸ: என்றுவருவதுபோல.] *ந சூத்ரா பகவத் பக்தா விப்ரா பாகவதாஸ் ஸ்ம்ருதா: ஸர்வவர்ணேஷு தே சூத்ரா யே ஹ்யபக்தா ஜநார்தநே* என்ற ப்ரமாணத்தின்படி ஆழ்வார் விப்ரர். [விபந்யவ:] 'பண—ஸ்துதௌ' என்கிறதாதுவடியாகத்தோன்றியபதம்இது. விசேஷமாகத் துதிப்பவர் என்றபடி. இஃது ஆழ்வார்க்கு மிகப் பொருந்தும். [ஜாக்ருவாம்ஸ:] பரமபதத்தில் கண்ணுறங்காதிருப்பது பெருமையன்று; ஆழ்வார் *கண்ணுரைக்கண்டு கழிவதோர் காதலுற்றார்க்கு முண்டோ கண்கள் துஞ்சுதலே* என்றும் கங்குலும் பகலுங் கண்துயிலறியாள்* என்றுமருளிச்செய்தபடியே இந்நிலத்திலும் கண்ணுறங்காதவராதலால் (ஜாக்ருவாம்ஸ:) என்பது ஆழ்வாரையே குறிக்கும்.

76. அந்த ச்ருதிசிரோவாக்யத்தில் (இந்ததே) என்றுமட்டுமிராமல் (ஸமிந்ததே என்றிருப்பதை நோக்கியே ஸ்வாமியெம்பெருமானுர் (ச்ருதிசிரஸி தீப்தே) என்னுமல் (விதீப்தே) என்றுவிசேஷித்தருளிச்செய்தபடி.

77. (ச்ருதிசிரஸிவிதீப்தே) என்றதை மற்றொருபடியாகவும் (ஆழ்வார்விஷயத்தில்) நிர்வஹிக்கலாம். எங்ஙனேயென்னில், ச்ருத்யாம் தீப்த:, ச்ருதிசிரஸி விதீப்த:=ச்ருதியாகிறது திருவாய் மொழியாகிற த்ரவிட வேதம்; அதில் தீப்த:— பதிகந்தோறும் (குருகூர்ச் சடகோபன்) என வருதலால் திருவாய் மொழியில் விளங்குகின்றாராழ்வார்; இனி ச்ருதிசிரஸ்ஸாவது கண்ணிநுண் சிறுத்தாம்பு; திருவாய் மொழியநுஸந்திக்கும் போதெல்லாம் அதன் முடிவில் மதுரகவி சொன்ன சொல் நியமேந அநுஸந்திக்கப்பட்டு வருதலால் அப்பிரபந்தத்தை ச்ருதிசிரஸ்ஸென்பது பொருந்தும்; அதில் விசேஷேண தீப்தர் ஆழ்வார். அப்பிரபந்தம் முழுவதும் ஆழ்வாரையே தெய்வமாக வைத்துப் பாடப்பட்டதாகையாலே.

78. [ப்ரஹ்மணி] நம்மாழ்வார் பெரிய திருவந்தாதி யென்கிற தம்முடைய திவ்யப்பிரபந்தத்திலே "புவியுமிருவிசும்பும் நின்னகத்த, நீயென் செவியின் வழி புகுந்தென்னுள்ளாய்—அவிவின்றி, யான் பெரியன் நீ பெரியையென்பதனை யாரறிவார்? ஊன்பருகு நேமியாயுள்ளு." என்கிற பாசுரத்தில்—ப்ரஹ்மமென்று பேர் பெற்ற எம்பெருமானையும் தம் முன்னே ஒரு மூலையில் அடக்கிக் கொண்டிருக்கிற தாமே பரப்ரஹ்ம மென்று ஸ்தாபித்து வைத்தார். ஆகவே ஆழ்வார்க்கே ப்ரஹ்ம சப்தார்த்தம் முக்கியமாகிறது.

79. [ஸ்ரீநிவாஸே] *அகலகில் லேனிறையுமென்று அலர் மேல் மங்கை யுறை மார்பனுகையாலே எம்பெருமான் ஸ்ரீநிவாஸனுகிறுன்; ஆழ்வார் எங்ஙனே ஸ்ரீமானுகிறாரென்னில்; "ஸ து நாகவர: ஸ்ரீமாந்" என்று கஜேந்திராழ்வானை ஸ்ரீமானென்றது போலவும், "அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந்" என்று விபீஷணுழ்வானை ஸ்ரீமானென்

றது போலவும், "லக்ஷ்மணோ லக்ஷ்மி ஸம்பந்ந:" என்று இளைய பெருமாளை ஸ்ரீமானென்றது போலவும் * ஒழிவில் கால மெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டுநாம்* என்றுபாரித்த ஆழ்வாரையும் ஸ்ரீமானென்னக் குறையில்லை.

80. [பக்திரூபா சேமுஷீ பவது] "நின்காதலையருளெனக்கு" என்ற திருமங்கையாழ்வாரைப் போலவும், "பகவந்! பக்திமபி ப்ரயச்ச மே" என்ற ஆளவந்தாரைப் போலவும் (பக்தி: பவது) என்னாமல் 'பக்திரூபா சேமுஷீபவது' என்றருளிச் செய்தது "மயர்வற மதிநலமருளினன்" என்கிற ஆழ்வார் பாசுரத்தை அடியொற்றியே. (மதிநலமருளினன்) என்ற விடத்து மதியையும் நலத்தையும் அருளினன் என்று கொள்ளும் பொருளை விட, நலமான மதியையருளினன்—பக்திரூபாபந்நமான ஞானத்தையருளினன்; முளைக்கும் போதே வயிரம் பற்றி முளைக்கும் பதார்த்தம் போலே உபக்ரமமே பக்திதசையாம்படியாக அருளினன் என்று இங்ஙனே பொருளை ஸ்வாமி திருவுள்ளம் பற்றினமை தோற்ற (பக்திரூபா சேமுஷீ பவது) என்றருளிச் செய்தபடி. இங்கே ஈட்டு ஸ்ரீஸூக்திஸேவிக்க.

81. ஆக, ஸ்ரீபாஷ்யோபக்ரமம் நம்மாழ்வாரை யநுஸந்தித்துக் கொண்டேயானாப் போலே ஸ்ரீபாஷ்யம் தலைக்கட்டினதும் நம்மாழ்வாரை யநுஸந்தித்துக் கொண்டேயாகிறது. எங்ஙனே யென்னில்; "ஸூத்ராப்யாஸ: சாஸ்த்ர பரிஸமாப்திம் த்யோதயதீதி, ஸர்வம் ஸமஞ்ஜஸம்" என்பது திற்க. "வாஸுதேவஸ் ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப இதி" என்கிற ஸ்ரீஸூக்தியோடே ஸூத்ரபாஷ்ய ஸமாபனமாயிற்று. வாஸுதேவஸ் ஸர்வமித்யாதி கீதா ச்லோகத்திற்கு சங்கராசாரியர் பண்ணின பொருளைத் தள்ளி [அதாவது, இதம் ஸர்வம் வாஸுதேவ:—என்கிற பொருளைத் தவிர்த்து] 'மம' ஸர்வம் வாஸுதேவ:' என்று ஸ்வாமி பாஷ்ய மிட்டருளினது *உண்ணுஞ் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாங் கண்ணனென்கிற ஆழ்வார் பாசுரத்தை யடியொற்றியே யென்பது கீழே விவரிக்கப்பட்டுள்ளது. ஆக ஆழ்வாரை ஸ்மரித்தே ஸ்ரீபஷ்யம் தலைக்கட்டிற்று.

82. மேலே காட்டிய ஸ்ரீஸூக்திக்கும் முன்னே "ந ச பரமபுருஷஸ் ஸத்யஸங்கல்ப: அத்யர்த்தப்ரியம் ஜ்ஞாநிநம் லப்த்வா கதாசித் ஆவர்த்தயிஷ்யதி" என்றருளிச் செய்ததானது "ரஸோ வை ஸ:, ரஸம் ஹ்யேவ;அயம்லப்த்வாநந்தீபவதி" என்கிற உபநிஷத்தில் (அயம்லப்த்வா) என்றிருப்பதோடு பொருந்தாததென்று நினைக்கலாயிருக்கச் செய்தேயும், "யானொட்டி யென்னுளிருத்துவமென்றிலன் தானொட்டிவந்து" என்றும் "என்னில் முன்னம் பாரித்துத்தானென்னை முற்றப்பருகினான்" என்றுமுள்ள ஆழ்வார் பாசுரங்களை யடியொற்றியேயாதலால் அந்த ஸ்ரீஸூக்தியாலும் ஆழ்வாரை யநுஸந்திக்தாராயிற்று. ... ... *

ஸ்ரீமதுபயவே, முதலியாண்டான்
ஸ்ரீசைலாசார்யஸ்வாமியின் ஷஷ்ட்யப்த
பூர்த்திமஹோத்ஸவ வித்வத்ஸத
ஸ்ஸில் விஜ்ஞாபித்த எம்பெரு
மானா ரெண்பத்திரண்டு
முற்றுப்பெற்றது.

———

## ஸ்ரீமதுபயவே முதலியாண்டான் ஸ்வாமியின்

# ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவ வைபவம்

ஸ்ரீ ராமாநுஜன் 281 ல் பிரகடனம் செய்திருந்தபடி **ஸ்ரீமதுபயவே. (வர்த்தமான முதலியாண்டான் பெரியவர். ஸ்ரீ குமார ஸ்ரீசைலா சார்ய ஸ்வாமிக்கு அறுபதாண்டு நிறைவு மஹோத்ஸவம் பெருமாள்கோயில் திருமாளிகையில் வெகு சிறப்பாக**



**நடைபெற்றுத் தலைக்கட்டிற்று. *சீராரும் சித்திரையில் சித்திரை நாளில் திருவவதரித்த ஸ்வாமிக்கு இந்த மஹோத்ஸவம் 10 நாள் நடைபெறுவதாக நிச்சயிக்கப்**

பட்டிருந்தது. எம்பெருமானுருடைய மஹோத்ஸவம் குறுக்கிட்டபடியால் ஏழு நாள் மட்டுமே இந்த மஹோத்ஸவம் நடத்த நேர்ந்தது. இது நடை பெற்ற விதம் பரம விலக்ஷணமாயிருந்தது. நம் பெருமாள் ஸன்னிதி, ஸ்ரீவில்லிபுத்தூர், மதுரை, திருக்கண்ணபுரம், திருவிந்தளூர், திருவல்லிக்கேணி முதலான திவ்ய தேசங்களி



லிருந்து வேதபாராயண ஸ்வாமிகள் வந்திருந்து அசீதியும் பாராயணம் செய்தனர். அனேக திவ்யதேசங்களிலிருந்தும் காஞ்சீப்ராந்த அக்ரஹாரங்களிலிருந்தும் அத்யாபகஸ்வாமிகள் அறுபது திருநாமங்களுக்கு மேல் எழுந்தருளியிருந்து அருளிச் செயல் ஸேவித்தார்கள். ததீயாராதன கோஷ்டியின் வைபவம் தனிப்பட்டது. தினந் தோறும் பகல் மூன்று மணிக்கு மேல் வித்வத்ஸதஸ்ஸு நடைபெற்றது.

(வித்வத்ஸதஸ்ஸில் அந்வயித்த வித்வான்கள் நாளடைவில் தெரிவிக்கப்படுகிறுர்கள்)

ஸ்ரீ உவே. திருக்கண்ணபுரம் கனபாடி சௌரிராஜய்யங்கார்

,, பிள்ளை லோகம் பாஷ்யகாரா சாரியர்

,, பிள்ளை லோகம் ஸ்தல சயனமையங்கார் டாக்டர் V. V. ராமாநுஜம்

R. V. சேஷாத்திரி ஐயங்கார் (அட்வ்கேட்)

,, ஸ்ரீ பெரும்பூதூர். தேசி. ரங்கராமாநுஜாசாரியர்

ஸ்ரீ உவே. நல்லான் ராமகிருஷ்ண ஐயங்கார்.
,, ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி திருமலை திருப்பதி சின்ன ஜீயர் ஸ்வாமி
,, கோயில் தி. அ. சதாபிஷேகம். கோவிந்த நரஸிம்ஹா சாரியர்.
,, ஸ்ரீ வைஷ்ணவஸுதர்சன பத்ராதிபர் புத்தூர். S. கிருஷ்ண ஸ்வாமி ஐயங்கார்
,, வேளுக்குடி. K. வரதாசாரியர்.
,, K. V. ராகவாசாரியர். ஆடிடர். வேலூர்,
,, திருநாராயணபுரம் ஜக்கு ஸுதர்சநா சாரியர்.
,, அக்காரக்கனி. தி. அ. ஸம்பத் குமாரா சாரியர்.
,, ப்ர. அண்ணங்கரா சாரியர்
,, ஸ்ரீரங்கம் பார்த்தஸாரதி ஐயங்கார்.



ஏழாவது நாள திருநக்ஷத்ரமாகையாலே அன்று அவகாசமில்லாமையால் வித்வத் ஸதஸ்ஸு முதல் நாளோடுமுடிவுபெற்றது. ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீகாஞ்சீ வாதிகேஸரி அழகிய மணவாள யதீந்த்ரப்ரவண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி வித்வத் ஸதஸ்ஸுக்கு தினப்படியாக எழுந்தருளியிருந்து மங்களாசாஸ நோபந்யாஸமும் செய்தருளினர். ஒவ்வொரு வித்வானும் செய்த உபந்யாஸம் மிக அருமைவாய்ந்

திருந்தது. அவ்வுபந்யாஸங்களை யெல்லாம் அவரவர்களிடமிருந்து வரவழைத்து ஸ்ரீராமாநுஜன் மூலமாக வெளியிட ஆவலுடையேன். இதையே ப்ரார்த்தநாபத்திரமாகக் கொண்டு அவரவர்கள் எழுதியனுப்பியருள வேணும். திருவுள்ளம் படியாகுக.

அடியேன் செய்த உபந்யாஸத்தையே இவ்விதழில் எம்பெருமானாரெண்பத்திரண்டாக வெளியிட்டிருக்கிறேன். இங்ஙனம் P.B.A. தாஸன்.



குறிப்பு;— மஹோத்ஸவ முடிவில் சிறப்பு மலர் ஒன்று வெளியிடப்பட்டுள்ளது. அது 56 பக்கங்கள் கொண்டுள்ளது. பல வித்வான்களின் கட்டுரைகளும் ஆசார்ய ஸ்வாமிகளின் திருவுருவப்படங்களும் ஆழ்வாராசாரியர்களின் திருவுருவப் படங்களுங் கொண்டு பரமவிலக்ஷணமாய்த் திகழ்கின்றது.

# ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவ நிகழ்ச்சியின் தொடர்ச்சி

## திவ்யதேச மரியாதைகள்

A. ராமாநுஜாசாரி B. A. எழுதுவது

ஷஷ்டியப்த பூர்த்தி முகூர்த்தநாளான 27—4—72 வியாழக்கிழமை அதிகாலையிலேயே நூற்றுக்கணக்கான சிஷ்யர்கள் த்வாதசோர்த்வபுண்புரம் தரித்து திருமாளிகையில் குழுமியிருந்தனர். ஸ்ரீமதுபயவே ஸ்ரீகுமார ஸ்ரீசைலாசார் ஸ்வாமியும்—



அம்மங்காரும் கும்ப ஜலமங்களஸ்நானம் செய்து அலங்கார பூஷிதர்களாக முகூர்த்த பூர்வாங்கங்களில் ஈடுபட்டிருந்தனர். வேத திவ்யப்பிரபந்த சாத்துமுறை முடிந்த

தும் பெருந்தேவித் தாயார் ஸமேதனான பேரருளாளன் ஸன்னிதியிலிருந்தும், இன்னும் ஸ்ரீரங்கம், திருமலை, திருநாராயணபுரம், ஆழ்வார் திருநகரி, ஸ்ரீபெரும் பூதூர், பச்சை பெருமாள் கோவில் முதலான சுமார் 30-திவ்ய தேசங்களிலிருந்து கோயில் மரியாதைகள் (மாலை, பரிவட்டம், துப்பட்டாக்கள், பவித்திரமாலை, சந்தன ஹஸ்த சின்னங்கள் முதலியன) மேள வாத்தியங்கள். பெரிய குடை சாமரங்கள், கொடி-விதானம், தண்டு, முதலிய அங்கங்களுடன், நூற்றுக்கணக்கான திருமாளிகை சிஷ்யர்கள் பின்தொடர, வேத கோஷ்டியுடன் நான்குமாட வீதிகளி லும் பிரதக்ஷிணமாகப் பவனிவந்தது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. திவ்ய தேச மரியாதைகள் திருமாளிகையை அடைந்ததும். ஸ்ரீபெரியஸ்வாமி தண்டனிட்டு வரவேற்றார். பிறகு அருளப்பாடிட்டு மாலை பரிவட்டங்கள் துப்பட்டாக்கள் அவருக்கு சாத்தப்பட்டன. இதற்குள் முகூர்த்த நேரம் நெருங்கிவிட்டது. வேத மந்திரங்கள் ஓத, வாத்ய கோஷங்கள் ஒலிக்க திருமங்கல்யதாரணம் ஆயிற்று.

பிறகு, திருமாளிகை வாசலில் போடப்பட்டிருந்த பூப்பந்தலில் ஸ்வாமியும் அம்மங்காரும் வீற்றிருக்க, வைதிக கோஷ்டிக்ரமம் நடைபெற்றது. பிறகு பெருமாள், தாயார் ஆழ்வார், எம்பெருமானார் ஆசாரியன் இவர்களுக்கு ஸம்பாவனைகள் ஸமர்ப்பிக்கப்பட்டது. வெகு பக்தி ச்ரத்தையுடன் சிஷ்யகோடிகள் ஆசாரிய ஸ்வாமிக்கு தண்டனிட்டுக் காணிக்கைகளை ஸமர்ப்பித்து ஆசாரியன் மந்திராக்ஷதை யைப் பெற்று க்ருதார்த்தர்களாயினர்.

கோஷ்டிக்கு சந்தன தாம்பூலம் பூரிதக்ஷிணை ஆன பிறகு ததீயாராதனமும் ததனந்தரம் வித்வத் ஸம்பாவனையும் நடந்தது. அன்றிரவு ஸ்ரீரங்கம் ஸ்ரீ உ. வே V. ஸ்ரீநிவாஸஸ்யங்கார் குழுவினரின் வீணைகான கச்சேரியுடன் ஷஷ்டியப்த பூர்த்தி மஹோத்ஸவம் இனிது முடிந்தது.

# ஸ்ரீமதுபயவே திருக்கண்ணபுரம் கனபாடி சௌரிராஜய்யங்கார் ஸ்வாமியின் ஷஷ்ட்யப்த பூர்த்தி கோஷ்டி.

திருக்கண்ணபுரத்தில் ஸ்ரீஉவே, கனபாடி, வேங்கடாசார்யஸ்வாமி யென்பவர் அவ்விடத்து வேதபாடசாலையில் பல பேர்களுக்கு க்ரமாந்தமும் கனாந்தமும் ஓதுவித்த மஹாபுருஷர். அவர் திருநாடலங்கரித்து 25 வருஷங்களுக்கு மேலானாலும் அவரிடத்தில் வேதமோதினவர்கள் தென்னாட்டில் உபயகலையிலும் பலர் விளங்கி வருகிறார்கள். அவருடைய திருக்குமாரரான ஸ்ரீஉவே, சௌரிராஜய்யங்கார் வேதபாரங்கதராய் வேதபாஷ்ய பாரங்கதராய் உபய வேதாந்த நிஷ்ணாதருமாய் பல வருஷங்களாகத் திருவரங்கம் பெரிய கோயிலில் ப்ரவசனபரராயும் கைங்கர்ய



நிரதராயும் விளங்கி வருகிறார். ஸ்ரீ காமகோடி சங்கராசார்ய ஸ்வாமிகளுக்கு இவரிடத்தில் பெருமதிப்புண்டு. அவருடைய பாரிதோஷிகங்கள் பல பெற்றிருக்கிறாரிவர். சென்ற மாசி மாதத்துவிசாகத்தினன்று இவர்க்கு நம்பெருமான் ஸன்னிதியில் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம் சிறப்பாக நடைபெற்றது. மூன்று நாள் வேதபாராயணாதிகளும் வித்வத்ஸதஸ்ஸும் நடைபெற்றன. ஸ்ரீமதுபயவே, வித்வான்களான மதுராந்தகம் ஸ்வாமி, திருமலை அனந்தாண்பிள்ளை சதாபிஷேகம் ஸ்வாமி, இளையவில்லி ஸ்ரீஸூக்தி ஸுதாநிதி பூவராஹாசாரியர் முதலானோர் அபிநந்தனம் செய்து நடத்தி வைத்தார்கள். ஸ்வாசார்யரான அப்பன் ஸ்வாமியுமெழுந்தருளியிருந்தார்.

# ஸ்ரீ பெரும்பூதூர் மஹோத்ஸவத்தில் வித்யாலய விசேஷம்

எம்பெருமானார் திருவவதாரஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூரில் ஸம்ஸ்க்ருத கலாசாலை ஸ்தாபிக்கப்பட்டு எண்பத்திரண்டு ஸம்வத்ஸரமானபடியால் அதற்கு நினைவாக இந்த வாண்டில் ஸ்வாமியுத்ஸவத்தில் ஒன்பதாந் திருநாளன்று (18-4-72) ஸதஸ்ஸொன்று வித்யாலய நிர்வாஹக ஸமிதியால் நடத்தி வைக்கப்பட்டது. சென்னை உயர் நீதிமன்றம் சீப் ஜட்ஜ் உயர்திரு. வீராஸாமியவர்கள் தலைமை தாங்கினர். ஸுப்ரஸித்தரான ப்ரஹ்மஸ்ரீ. டாக்டர். V. ராகவன் அவர்களும்



ப்ரஸன்னமாயிருந்தனர். த்வைதாத்வைத விசிஷ்டாத்வைதமதங்களின் வாசியை விளக்குவதற்காக அழைக்கப்பட்டு நாமும் சென்றிருந்தோம். ஸூத்ரகாரருக்கு அபிமதமான மதம் விசிஷ்டாத்வைதமேயென்று விளக்கினோம். இந்நிகழ்ச்சிக்கு நினைவு மலரொன்று வெளியிட்டிருக்கிறார்கள். அதில் இவ்விஷயத்தை ஸம்ஸ்க்ருத பாஷையில் வெளியிடுவித்திருக்கின்றேன். வித்யார்த்திகளுக்கு வஸ்த்ரரூபமாகவும் புஸ்தகரூபமாகவும் பரிசு வழங்கப்பட்டு ஸபை இனிது முடிவு பெற்றது.

P. B. A.

# ரத்ன தீபம் அணைந்தது அந்தோ!

ஸ்ரீவைஷ்ணவ குலரத்ன தீபமாக விளங்கின ஸ்ரீமான் உவே, மாடபூசி. ஸுதர்சனமையங்கார் 30—4—72 ஞாயிற்றுக்கிழமையன்று மைலாப்பூரில் தமது பங்களாவில் மண்ணுலகைவிட்டு விண்ணுலகை யெய்தினரென்பதை உலகமெல்லா மறிந்து வருந்திக் கிடக்கின்றது. இச்செய்தியை நாமும் அறிவித்து வருந்துகிறோம். M. D. Bros., என்று வழங்கிவந்த குடும்பத்தைச் சேர்ந்த இவர் அந்த குடும்பத்தில் கடைக்குட்டியாக விளங்கி வந்தார். இவருடைய அநுபவம் எனக்கு 1930 முதல் 1956 வரை (26 வருஷகாலம்) இடையறாது தொடர்ந்து வந்தது. சனிக்கிழமை தோறும் மாலையிலும் ஞாயிற்றுக்கிழமை தோறும் காலையிலும், மார்கழி மீ 30 நாளும் சென்னைத் தொண்டமண்டலம் ஸ்கூல் ஹாலில் நடந்துவந்த நம்முடைய பிரவசனங் களுக்கு லேட் இல்லாமலும் ஆப்ஸண்டு இல்லாமலும் ஆஜராகிவந்த குடும்பம் M. D. Bros., குடும்பம் என்பது உலகப்பிரசித்தம். ராமலக்ஷ்மண பரத சத்ருக்நர்கள் போல் நால்வரான இவர்களில் நாலாமவரான நம் ஸுதர்சனமையங்கார் நக்ஷத்ர மண்டலத்தில் சந்திரன்போலே விளங்கிவந்தார். தார்மிகர்களில் தலைவர்; ரஸிகர் களில் தலைவரினும் தலைவர். மஹாமஹோபாத்யாய. (தாக்ஷிணாத்ய கலாநிதி) சாமிநாதையரவர்களை இவர் தமது காரில் அழைத்துவருவதும், பிரவசனம் முடிந்ததும் அவரை அவரது ஜாகையில் கொண்டுவிட்டுப் போவதுமாயிருந்த செய்தியை நினைக்க நினைக்க நமது துயரம் ஆறவில்லை.

இப் பெரியாரைப் பற்றி ஸ்ரீராமாநுஜனில் பலகால் எழுதியிருப்பதை நண்பர்கள் மறந்திரார்கள். இவருடைய வயது எண்பத்து மூன்றுவது நடைபெறுவதாம். புகழுடம்புடன் வாழ்பவர்களில் இவரே தலைவர் என்னலாம். இவரது குடும்பத்திற்கு நமது அநுதாபத்தை யறிவித்து நிற்கின்றோ......

# காலஞ் சென்ற
# K. வெங்கடசாமி நாயுடு அவர்களைப் பற்றி



சென்னையில் பிரபல பிரசித்திபெற்ற அப்பா அண்ட் கம்பெனியைச் சேர்ந்த உயர் திரு. K. வெங்கடசாமி நாயுடு, பி. ஏ., பி. எல். அவர்களை நமது இந்திய நாடு முழுதும் அறியும்; த்வீபாந்தரங்களும் அறியும். இவர் சில காலம் மந்திரி பதவியையும் வகித்திருந்தார். அநேக தர்ம ஸ்தாபனங்களில் பங்கு கொண்டிருந்தவர். இந்த மஹான் சென்ற மார்ச் மாதத்தில் விண்ணுலகடைந்த விஷயம் உலகமெல்லாம் வருந்தத்தக்கது. உயர் திரு. வெங்கடசாமி நாயுடு அரை நூற்றாண்டு காலம் பல்வேறு துறைகளில் ஆற்றிய சேவைகளைப் பாராட்டி இந்திய ஜனாதிபதி உயர் திரு. வி.வி. கிரி அவர்கள் ராஷ்டிரபதி பவனத்தில் அவருக்கு "பத்மஸ்ரீ" பட்டம் வழங்கிய போது எடுத்த படம் இங்கே காட்சி தருகின்றது. ... ... ...